[10th August 1960

(ஆ) ராஜ்ய அரசாங்கம் இத் திட்டத்தின் கீழ் எந்த இடங்களில் எத்தனை வீடுகள் கட்ட முடிந்தது?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) The Life Insurance Corporation of India is not giving any loan to the State Government for construction of tenements for industrial workers.

(*b*) Does not arise.

*Sugar*

*71 *Q*.—SRI N. R. THIAGARAJAN: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லாவிற்கு ஒதுக்கப்பட்ட சீனி மூட்டைகள் எத்தனை?

(ஆ) அதில் பெரியகுளம் தாலூகாவிற்கு எத்தனை மூட்டைகள் கொடுக்கப்பட்டன?

(இ) சீனி வாங்கி சில்லறையில் பொதுமக்களுக்கு விற்று பழக்கமில்லாதவர்களுக்கு சீனி பெர்மிட் கொடுக்கப்பட்டதா?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) 10,000 bags.

(*b*) 1,200 bags.

(*c*) No, Sir.

SRI N. R. THIAGARAJAN: "சர்க்கரை" என்ற சொல் தான் இனிப்பாக இருக்கிறதே தவிர, விநியோக விஷயத்தில் இனிப்பாக இல்லை; கசப்பாக இருக்கிறது. நகரவாசிகளுக்கு அதிகமாக விநியோகிக்கப்படுகிறதே தவிர, கிராமவாசிகளுக்குப் பரவலாக விநியோகிக்கப்படவில்லை என்ற புகார் இருக்கிறது. ஆகவே, ஒரு திட்டவட்டமான கொள்கையை வகுத்து, நகரங்களில் பங்கீடு செய்வதைப்போல் கிராமங்களிலும் சரியாகப் பங்கீடு செய்யப்படவேண்டுமென்று சர்க்கார் சரியான உத்தரவு போடுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: திட்டம் போட்டு, எந்த எந்த ஜில்லாவுக்கு எவ்வளவு தேவை இருக்கிறதோ அதைக் கணக்கிலெடுத்து அதற்குத் தகுந்தாற்போல் ஏற்பாடு செய்யப்படுகிறது. இதிலே கஷ்டம் என்னவென்றால், வட நாட்டிலிருந்து சர்க்கரை இங்கு வருவதற்கு ஒரு மாதம் இரண்டு மாதம் ஆகிறது. அதுபற்றி அவர்களுக்குச் சொல்லியிருக்கிறோம். ஒரு மாதம், இரண்டு மாதத்திற்கு முன்பே "லோட்" பண்ணி அனுப்பச் சொல்லியிருப்பதால், இனி காலா காலத்தில் வரும்; அப்பொழுது சரியாகப் போய்விடும்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM: மதுரை நகரைப் பொறுத்தவரையில், அங்கு விசேஷ காலங்களிலும் மற்ற காலங்களிலும் சர்க்கரை வேண்டியிருந்தால், தாசில்தாரோ, ரெவின்யூ

10th August 1960]

டிவிஷனல் ஆபீசரோ கொடுக்க மறுக்கிறார்கள். விசேஷ காலங்களில் சர்க்கரை கிடைக்க அரசாங்கம் வகை செய்வார் களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அதைச் செய்து கொண்டுதான் வருகிறார்கள். தீபாவளி, பொங்கல் காலத்தில் அதிகமாக சர்க்கரை கொடுக்க ஏற்பாடு செய்கிறார்கள்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM: கல்யாண சமயங் களிலே . . .

THE HON. SRI M. A. MANICKAVELU: கல்யாணங்கள் ஒரு வருஷத்திலே ஜாஸ்தி நடக்கலாம், ஒரு வருஷத்திலே குறைவாக நடக்கலாம். அதைப்பற்றி திட்டவட்டமாகச் சொல்ல முடியாது. பண்டிகை என்றால், அந்தந்தக் காலத்தில் தாராள மாக அதிகமாகக் கொடுக்கிறோம்.

SRI K. SATTANATHA KARAYALAR: சர்க்கரை விநி யோகிப்பதற்கு எந்த விதமான நடவடிக்கை எடுக்கப் பட்டுள்ளது? கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக பெரும் பகுதி கொடுக்கப்படாமல் மிகக் குறைந்த அளவு தானே கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகக் கொடுக்கப்படுகிறது. பத்து சதமானத் திற்கும் குறைவாகத்தான் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகக் கொடுக்கப்படுகிறது. சர்க்கரை விநியோகத்தில் நமக்குப் பரிபூரணமான கட்டுப்பாடு கிடையாதா? கூட்டுறவு இயக்கத் திற்கு முதல் இடம் கொடுக்காமல் பரம்பரை வியாபாரிகள் மூலமாகவே கொடுக்கப்படுவது ஏன்?

MR. SPEAKER: மூலக் கேள்வி, "மதுரை ஜில்லாவிற்கு ஒதுக்கப்பட்ட சீனி மூட்டைகள் எத்தனை" என்பது பற்றியது, "பாலிஸி மாட்டர்" கேட்கப்படவில்லை. மந்திரி அவர்கள் சுருக்கமாகப் பதில் கொடுப்பதாக இருந்தால் எனக்கு ஆட்சேபணை இல்லை. I should have even disallowed the question of the hon. Member Srimathi Lakshmikantham and there is no justification for the hon. Member to put a similar question.

(பதில் இல்லை)

* 72 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Revenue be pleased to state the steps taken to bring down the price of sugar in the Madras City?

THE HON. SRI M. A. MANICKAVELU: Sugar is being sold in Madras City at present at Rs. 118 to 121·44 per bag and Rs. 1·66 to 1·71 per viss, which is the controlled price.